ரும் உரைத்தாய்வினைகொடுமையே அத்துவிதத்தைப்பொருந்தி
ன மெய்யடியார்கள் குழாமும் சாதுவருணத்தாரும் காலாச்சிரமத்
தா[illegible] பண்ணி அன்னதானம், சொர்ணதானம்
[illegible] ஆபரண முதலாகிய பாக்கியங்களெல்லாம்பெற்று மகிழ்
ச்சியைப்பெறுகிற திருக்கூட்டங்களும், சரியை, கிரியை, யோக
ங்களையுடைய சுவாமிகள் அவரவருக்குவேண்டும் பாக்கியங்க
ளைப்பெற்றுவாழுகிற திருக்கூட்டங்களும், வடநூல் தென்றமி
ழிலே மகாவல்லவர்களாயிருக்கிற பெரியோர்கள் அவரவருக்கு
ள்ள சந்தேகத்தை தீர்த்துக்கொள்ளுகிற திருக்கூட்டங்களும்,
திருமேனிப்பொலிவு நோக்கித் தரிசனம் பண்ணுகிற திருக்
கூட்டங்களும், இராஜ இராஜாக்கள் மந்திரிமார் முதலான ம
கப்பிரபுக்கள் வந்து தரிசனம்பண்ணி அவரவருக்கு வேண்டு
ம் புத்திகேட்டும் மகிழ்ச்சியைப்பெறுகிற திருக்கூட்டங்களு
ம், இன்னம் இப்படி பல பலவிதமாய் எல்லாரும் அவரவருக்கு
வேண்டிய வேண்டியபாக்கியங்களைப்பெற்று வாழுகிற திருக்கூ
ட்டத்தின் முன்னே மிகுந்தபுல்லறிவினையுடைய அடியேனும் தி
ருக்கூட்டத்திலேவிட்டுச்சென்று திருமேனியையுங்க
[illegible]ண்டுபுறம்வாழ்ந்தேன். அன்ன என்னிடத்திலேயிருக்கிற
[illegible] பெரியதன்மையும் பார்த்துக்கொண்டு [illegible],

 

பெயரையும் உருவையும் அறிவையுங்கெடுத்து என்னைப்பித்தனாக்கி என்னையும் தன்காலின் கீழாக்கிக்கொண்டான். அவனுடைய பொன்னடித் தாமரையானது அடியேன் புன்றலைமீதிற் பொறித்த உடனே பண்டை இருவினையும் அதனால்வரப்பட் [illegible] ர்தங்களும் நீங்கித் தற்போதமுநீங்கி அருளைப்பொருந்தி அட [illegible] நிற்கிற எனக்கு அவனது காருண்ணியத்தினாலே மேலான சகசொரூபமாகிய திருமேனிதரிசனங் காட்டலை யிட்டருளினான். அவனது திருமேனியாவது, அகண்டாகார சச்சிதானந்த சிற்சொரூபமாய் முத்தியடையப்பட்ட காதாக்களுக்குப்பேரின்ப வீடாகவும், அவர்களுக்குப்பேரானந்தப்புசிப்பாகவும், திருவருளையே பொருளாகநிற்கிற சத்துக்களுக்கெல்லாந்தரிசனமாகவும், மற்ற ஆத்மாக்களுக்கெட்டாத பொருளாகவும், இப்படி அரிதிற்குமரிதாய்மனவுணர்வுக்கெட்டாத பொருளாகவிருக்கிற சொரூபதரிசனம் எனது புல்லறிவுக்குங் கிடைக்கப்பெற்றேன். அவனுடைய திருவடி வல்லபத்தை யாராலே யளவுபடுத்தப் படுமென்று வந்தவருமையை நோக்கி நோக்கிநைந்து நைந்து உருகி யுருகி அளப்பருஞ் சலதியினுட்படு நீர் அடங்கினதுபோல, நிலைபெற்றமாணாக்கன், மேலான இன்பசாகரத்தைப் பொருந்திப் பேரின்ப வீட்டையடைந்தனன். இப்படிப் பேரானந்தத்தைக் கொடுக்கப்பட்ட மேலான சகசொருபத்தை அறிதற்குச்சாதி,

இப்படி இந்தத்திருவடி வல்லபமும் அரனுடைய உபகாரமும் அதிலடைந்தாரதாக்களாலே அறியப்படுமல்லாமல் மற்றொருவராலேயும் எந்த எதுவினாலேயும் அறியப்படாதென்று அறிக. இந்தமேலான நிலையைப்பொருந்தின சத்துக்களுக்கு அவர்கள் திருமேனி நீங்கினாலும் இந்தப்பேரின்பந்தான். திருமேனியுடைததாயிருந்தாலும் இந்தப்பேரின்பந்தான். இதற்குச் சுருதி.

"மூதறிவார்க்கம்மையுமிம்மையேயாம்"

என்பதினாலும்,

"அமையத்தளித்தமேனி"

என்பதினாலும் அறிக.

அவர்கள் அருமையா நிலையினின்ற அன்பினால் இன்புறுப்பட்டவர்கள். அவர்களுடைய அருமை அவர்களுக்கு இன்பத்தையே கொடுத்துக் கொண்டிருக்கிற கர்த்தாவுக்கே தெரியுமல்லாமல் மற்றொருவருக்குஞ் சற்றுந்தெரியாதென அறிக. இங்ஙனம் சொல்லப்பட்ட உபகாரமெல்லாம் தன்னடியவர்க்கு மூலபண்டாரம் வழங்குகின்ற முறைமை.

(4) தடத்தத்திலே இரட்சிக்கிற முறைமை.

இனி அந்தப் பொருடானே தடத்தமாகத் திருமேனிகொண்டு உயிர்களுடைய பாகம் பார்த்துச் சட்சுதீட்சை முதலிய

## சற்குருதேசிகன் தரிசனம்.

எழுவகைத்தீட்சை பண்ணவேண்டியும், வேதாகமப் பொருளைக் சன்ன பரம்பரையாகக் கட்டளையிட்டருள வேண்டியும், இப்படி நிலைபெற்றசிஷனுக்கு சுருதி குருவாக்குடனே சுபானுபவப்படுத் தவேண்டியும், பெத்தாத்மாக்களுக்குப் பலவிதமாகப்புண்ணியம் ஏற்றவேண்டியும், இன்னம்இப்படிப்பலவிதமாக உபகாரப்படுத்து வர். அதுவன்றியும் மாசற்றமெய்யடியார், மகாதவங்கள் பண் ணித் திருமுன்பே வரப்பெற்று சமையதீட்சை விசேடதீட்சை முதலான தீட்சையும் பண்ணி அவர்கள் திரிகால சந்தியிலும் தேவர்கள், இருடிகள், பூதங்கள், பிதிர் தேவதைகள் முதலான தேவதைகளுக்கெல்லாம்அர்க்கியங்கொடுத்தலினாலே அவர்களெ ல்லாம் நன்றாய்த் திர்ப்தியடைந்தின்புற்றே யிருப்பார்கள். அப் படிஅவர்கள் இன்புற்றால் அவர்களிடமாகப் பூமியிலே மழை[illegible] ன்றும்[illegible] நுஷித்துச் சராசரங்களெல்லாம் துயர்நீங்கிஆரோக்கிய [illegible]ருக்கும். ஆலயங்களுக்கெல்லாம் பூசைமுதலானபணிவி டைகளும் சிறப்பாகவே நடக்கும். ஆதலினாலே வென்றுமே தி ருமேனிகொண்டே இரட்சிப்பர்: அதெப்படி,

"கனவிலுந் தேவர்க்கரியாய்போற்றி
நனவிலு நாயேற்கருளினைபோற்றி"

என்பதினாலும் அறிக. மனத்துக்கும் எட்டாத பொருள்தானே
என்போலிகளுங் காணும்படியாக மானிடச்சட்டை சாத்திக்
கொண்டு சர்வாத்மாக்களுக்குந் தரிசனங்கட்டளையிட்டருள,
அடியேனுக்குந் தரிசனங் கிடைக்கப்பெற்றேன்.

இதற்குச்சுருதி.

"அரிக்கும்பிரமற்குமல்லாத தேவர்கட்கும்"

என்கிற திருவாக்கினால் அறிக. இப்படி ஞானதேசிகனை
த் தரிசனம் பண்ணப்பெற்ற மாணாக்கன் சுவாமியுடைய திரு
மேனியை நோக்கி வியந்து நிற்கின்றான்; அதெப்படி? கருணை
பொழிகின்ற திருமுகமண்டலமும், அதிலே தன்வழி நடத்து
தனைத்திருப்பி அவன் தன் வழி நடத்திக் கொண்டதாலும்
குறுநகையும், திருக்கரத்திலே சின்மயமுத்திரையுங் கண்டான்.
அப்போது தன்னைப்போனகத்திலே வைத்தருளின திருவ
டித் தாமரையுங்கண்டான். களிப்புற்றான், விழுந்தான், எழுந்
தான். விம்மினான், உடல்கம்பித்தான். உரோமஞ்சிலிர்த்தான். க
ண்ணீர்மாரி பயில்வித்தான். பரவசமடைந்து, இன்புற்று, சுவா
மியுடைய திருவடியை நோக்கித் தோத்திரம் பண்ணுகிறான்.

1. "[illegible]
சொல்லாதசொல்லதனைச் சொல்லுதற்குவந்தவா"

விண்ணப்பஞ்செய்ய, சுவாமி திருவுள்ளம் பற்றுகிறார். வாரு
ம்பிள்ளாய்! நிலைபெற்ற மாணாக்கனே! நீ சற்றவத்தினாலே இ
ருமுன்பு வரப்பெற்றாய், அதனாலே அந்தப்பொருள் உன்னை
க்கெளிகரித்துக்கொண்டது. அதெப்படி,

"இரும்பைக் காந்தம் வலித்தாற்போல்"

என்கிற திருவாக்கு முழுவதிலும் அறிக. இது அன்றியும் அந்த
ப்பொருளுடையவல்லபம் ஒன்றினாலேயும்அளக்கப்படாது. எல்
லாம் அந்தப்பொருளாகவேயிருக்கும். ஒன்றுமல்லாதபொருளா
கவுமிருக்கும். இப்படி நாதன் திருவுளம் பற்றக்கேட்ட மாணாக்க
ன் சுவாமியையப்பார்த்து, சுவாமீ, அடியேனை மேலானசுகசொரு
பத்திலே வைத்து அதனுடைய உண்மையையுங் கட்டளையிட்
டருள நானுங்கண்டு மகிழ்ச்சியைப் பொருந்தினேன். அன்பரு
க்கன்பனே, மெய்யருக்குமெய்யனே, அறிஞர்க்கறிவாகியசொரு
பனே, சுவாமீ, ஒரு விண்ணப்பம்; அடியேனுக்குபெந்தம்வந்தவ
ரலாறும், தேவரீருடைய சுபாபமும், அடியேனுடைய செய்தியு
ம், சாயுச்சியம்பெறுகிற மகிமையும், அதிலேனைத்தோருடைய த
ன்மையும் கட்டளை யிட்டருளவேணுமென்று விண்ணப்பஞ்செ
ய்ய, சுவாமி திருவுள்ளம் பற்றுகிறார்: வாரும்பிள்ளாய்! உ
னக்குக்காணுதலெவ்வா[illegible]காட்டிவித்தேந

ம். இனிக்கேளாதன் வெல்லாங் கேட்பிக்கிறோம், நீ உனக்கு
க் கேட்கவேண்டுங் காரியமெல்லாம் நன்றாய்க்கேட்டு மாசறுகா
ட்சியாக ஐயந்திரிவு விகற்பநீங்கிப் பேரின்பத்தை அடைந்து
இன்புறுவாயாக என்று அருளிச்செய்ய, மாணாக்கன் பெந்தம் வ
ந்த வரலாறு எப்படி யென்று சுவாமியிடத்திலே தோத்திரம்பண்
ணி விண்ணப்பஞ்செய்கிறான். சுவாமி, நீரும் நித்திய நிறைவு
நானும் நித்திய நிறைவு, நீரும் நானும் பிரிவிலோம், நீர் சுத்தமா
வதேன், அடியேன் அசுத்தனாயிடர்ப்படுவதென்னோ? வாரும்பிள்
ளாய், மாணாக்கனே! நமக்கொன்றேகுணம், உனக்கிரண்டு குண
ம். அதெப்படி, நாமெக்காலமும் இன்பமே சொரூபமாயிருப்
போம். நீ பெத்தத்தைப்பொருந்திப் பேரிடர்ப்படுவதும், முத்தி
யைப் பொருந்திப் பேரின்பத்தை அடைகிறது மாகயிருப்பாய்.
அந்தப்பெத்தம் உன்னாலேவரப்பட்ட கேடு, முத்தி நம்மாலே வ
ரப்பட்ட வாழ்வு, உன்னாலே வரப்பட்ட பெத்தம் நீங்கிப்போம்.
நம்மாலே வரப்பட்டமுத்தி ஒருகாலமும் நீங்காது என்கிற
திருவாக்குக்கேட்ட மாணாக்கன் சுவாமியைத் தோத்திரம் பண்
ணுகிறான். சுவாமி, சர்வஜெகநாதனே, தேசிகசிகாமணியே,
கருணைமேருவே, பசுபாசங்கடந்தசொரூபனே, என்னுடையதே
கம் தேவரீருடைய உபகாரமும் நன்றாய்க்கண்டேன், இனி உ

ம்முடைய பழமையாகிய சொரூபமும, சாவாத்மாக்களையும் இரட்சிக்கிற சாவக்கியத்துவமும அடியேன் கேட்கவிரும்பினேன், நன்றய்அறியும்படிக்குக் கட்டளையிட்டருளவேணுமென்று விண்ணப்பஞ்செய்ய, சுவாமி அநுக்கிரகம் பண்ணுகிறார். வாரும்பிள்ளாய், நிலைபெற்ற மாணாக்கனே! நம்முடைய சொரூபம் ஒன்றிலேயும் அளவுபடாது, ஆதியுமில்லை அந்தமுமில்லை, எதனை விசாரித்தாலும் முன்னைப்பழம பொருட்கு முன்னைப்பழம் பொருளாகவேயிருக்கும். பின்னைப்புதுமைக்கும் பெயர்த்துமப்பெற்றி யாகவேயிருக்கும். நம்முடைய சர்வ கர்த்துருத்துவமும், அப்படியே யிருக்கும். ஒன்றிலுலேயும் அளவுபடாது, நீ அறியுந்தரமல்ல, அதெப்படி, நம்முடைய சொரூபம், அண்டமோரணுவாம் பெருமை, உன்னுடைய தன்மைக்களவுபடமாட்டாது.

இதற்குச்சுருதி,

"பெருமைக்குநுண்மைக்கும் பொருட்கும் பேற்றி
மருமைக்கு மொப்பின்மையால்"

[illegible] என்று சுவாமி திருவுளம்பற்ற, மெய்யன்பினையுடைய சீஷன் சுவாமியைப்பார்த்து, இவ்வித மேலான பொருளை, அடைந்தின்பம் பெறுகிற தெப்படி

யென்னில் ஆத்மா சிவத்தைப்பொருந்திப் பேரின்பம் புசிக்கிற வகையை அனுக்கிரகம் பண்ணுகிறார். அதெப்படி, சிவனை நான் காணவேணுமென்கிற போதகமெட்டுக்கேறன்போடு வழிபட்டால், அவர் தரிசனங்கொடுப்பார். இதற்குச் சுருதி,

"அப்படி யனவ்வுருவனவ்வண்ணத்த
னவனருளே கண்ணாகக்காணினல்லா,
லிப்படியனிவ் வுருவனிவ்வண்ணத்
னிவனிறைவனென் றெழுதிக்காட்டொணாதே"

என்கிற திருவாக்கினால் அறிக. இப்படி அரிய காட்சியாகத் தரிசனம் பண்ணினால் அந்த உயிர் சிவத்தில் அழுந்திச் சிவமாயேபோய் ஆனந்தத்தைப் புசிக்குமல்லாது, அங்கு காண்பானுங் காட்சியுமில்லை; முற்றுணர்வுமில்லை என்று திருவுளம் பற்றக்கேட்ட மாணாக்கன் அதெப்படிப் போலவென்று வினவ, கடலாடப் போனவன் அந்தக்கடலைக் கண்ணாலேகண்டு ஈன்றாயமட்டு மூழ்கினதல்லாமற் கடலுடைய விசாலமும் ஆழமும் அறியமாட்டாதது போல

2

வென அறிக. கர்த்தாவுடைய சொரூபத்தை நன்றாயறிந்த மாணாக்கன் பெருமகிழ்ச்சியோடு குருசுவாமியுடைய பாதத்தைச் சிரசிலே சூட்டிக்கொண்டு தோத்திரம் பண்ணுகிறான். அம்பலவாணகுருவே! அம்பலவாணதேசிகனே! அம்பலவாணசுவாமீ! என்னையும் ஒருவனாக்கி இருங்கழல் சென்னியில் வைத்த சேவகனே! பதிக்கும் பதியாய், பரத்துக்குமப்பாலாய், விதிக்கும் விதியான மெய்ப்பொருளே, தேவரீருடைய சொரூப மளவுபடாத செய்தியும், அடியேனை இரக்ஷிக்கிற செய்தியும் நன்றாய் அறிந்தேன். இனி அடியேனுடைய செய்தியைக் கட்டளையிட்டருள வேணுமென்று விண்ணப்பஞ்செய்ய, சுவாமி அனுக்கிரகம் பண்ணுகிறார். வாரும்பிள்ளாய்! உயிர்களுக்கு, குற்றமே வடிவாயிருக்கும், குணம் சற்றுமில்லை. அதிலே சிறிது சொல்லுகிறோம். அதெப்படி, உனக்கு சுதந்திர அறிவில்லை. கிஞ்சிக்கினத்துவமுண்டு. அனாதியே அபக்குவத்தினாலே நல்ல நிலையை விட்டு மலத்தைப்பொருந்திக் கேவலப்பட்டனை.

அதற்குச்சுருதி,

"நினைப்பிரிந்தவிரிதலையேனை"

என்பதினாலும்.

"பாவிபடுமனமேபாவிநீ"

என்பதினாலும்,

"விலங்கினேன்வினைக்கேடன்"

என்பதினாலும் அறிக.

அந்தக்கேவலத்தை நீக்கவேணுமென்கிற விருப்பத்தினாலே, சிவன் சுத்தமாயை, அசுத்தமாயைகளைப் பிரித்து, தனுகரணங்களையுண்டாக்கி, அந்தக்கருவி கரணங்களுக்கெல்லாம் வெவ்வேறு தொழிலும் வெவ்வேறு வல்லபமும் உண்டாக்கி, அதிற்றானுங் கூடயிருந்து நடத்துவர். அந்த உபகாரத்தை மறந்து, அந்தச்சரீரத்தைத் தானென்று நினைத்துக் கொள்ளுகிறது குற்றம்; இப்படி கர்த்தா ஆத்மாவுக்குச் சரீரத்தைக் கொடுத்ததற்கு,

சுருதி,

"காயத்திடுவாயுன்னுடையகழற்கீழ்வைப்பாய்
கண்ணுதலே"

என்கிற திருவாக்கினால் அறிக. கர்த்தா பதினெட்டுக் கருவி கொண்டு, ஒருவிடையத்தை அறிவிக்கு மிடத்து, உயிர்

ஒவ்வொரு கருவியாகப் பற்றுமல்லாமல், இரண்டு கருவிகளை ஒன்றாய்ப்பற்றமாட்டாது; அதெப்படி, வெகுவிரைவிலேபுராண முதலான நூல்களைப்படித்தாலும் நாவிலே, ஒவ்வோர் அட்சரமாக அடிபடுமல்லாமல், இரண்டு அட்சரங்கள் ஒன்றாய் அடிபடமாட்டா. அதுபோல் என அறிக. இப்படி சிற்றறிவினையுடைய ஆத்மா ஆணவபோதில் அனேக கன்மங்களை ஆர்ச்சித்து இடையறவே பெருக்கும். அதுவன்றி அவ்வாத்மா, நித்தியமாய், சேதனாய் வியாபகமாயிருக்கும். சரீரம் அநித்தியமாய், சடமாய், ஏகதேசமாயிருக்கும்; நித்தியத்துக்கு அநித்தியம் பகை. சேதனத்துக்கு சடம்பகை. வியாபகத்துக்கு ஏகதேசம்பகை. இப்படி பகைப்பொருளாய் அன்னியமாயிருக்கிறபொருள்களை கர்த்தா தன்னுடைய வல்லபத்தினாலே, உயிர்கள் கன்மம் புசிக்கும்படிக்குபாத்திரமாக உடலோடு உயிர்களைச் சந்தானப்படுத்தி, அன்னியப்பொருள்களை அனன்னியப்படுத்தி, உடலுக்கு உயிரியமாகத் தொழில் நடத்தியும், உயிருக்கு உடலிடமாக அறிவுவிளக்கியும், அதிற்றானுங்கலந்து, நிற்பர். அந்த உயிரும் அசைவற்ற பொருள், உடலும் சடம்; அந்த இரண்டுபொருளையுஞ்சந்தானப்படுத்தி ஒட்டி நடக்கப்பண்ணின கர்த்தாவுடைய வல்லபத்தை

மறந்து தன் சாமார்த்தியத்தினாலே சஞ்சரிக்கிறேமென்கிறதும் பெருங்குற்றம். அந்த உயிர் தனது செருக்குடனே கூடிச் செய்கிற குற்றங்களையெல்லாம் சிவன்செயல் என்றும், சிவனாட்டியுறக்கி நடத்தி வருகிறதொழிலையெல்லாம் தன் சாமர்த்தியத்தினாலே உண்டுறங்கி நடந்துவருகிறேமென்றும் எண்ணிப்பகுப்புத்தெரியாமற் பெருங்குற்றப்படுவன். இந்த ஆத்மா குற்றங்களை ஈட்டிக்கொள்ளுமிடத்து எத்தனை எத்தனை விதமாயோ எந்தெந்தக்காலங்களிலேயோ ஆர்ச்சித்துக்கிடக்கப்பட்ட கன்மங்களைக்கர்த்தா ஆராய்ந்து ஆராய்ந்து அறுசதுமமிலாமாக்கருணையினாலே எய்ம் மறகாத்து இரட்சிப்பான். அக்கர்த்தாவைத் துணையென்றறியாத காலமெல்லாம் இப்படியே குற்றப்படுவன்.

அதற்குச்சுருதி.

"அன்பர்பிறவியாய்ந்தாய்ந்தறுப்பாய்"

என்பதினாலும்,

"ஆட்பாலவர்க்கருளும் வண்ணமுமாதிமாண்புங் கேட்பானபுகிலளவில்லை"

என்பதினாலும் அறிக.

இதுவன்றிச் செய்யாக்காரியங்களையே செய்கிறதுகோடி, செய்கிறகாரியங்களைச் செய்யாமல்விட்டதுகோடி, உண்டென்னும்பொருளை இல்லையென்றே நினைத்து நடக்கிறதுகோடி, இப்படித் திருவருளைப்பிரிந்த உயிர்களுக்குக் குற்றமெத்தனைகோடியோ, துயரமெத்தனைகோடியோ தெரியாது. அப்படிப்பட்ட உயிர்களையும் இரக்ஷிக்கிற வல்லபமும் இரக்கமுமுடைய நாதன்றானே அந்தந்த உயிரின் வழித்தாகவே கிருத்தியப்படுத்துவர். அப்படி அவரோ கிருத்தியப்படுத்தியும் அவருடைய தொழிலே அல்லவென்பதற்குச் சுருதி.

"குணவழியொழுகார் குணவழியொழுகிக்
குணத்தினைத்திருப்புவார்போல"

என்பதினாலும்,

"சித்தாட்டினுஞ் சித்தாட்டல்லவே"

என்பதினாலும் அறிக.

இவ்வாத்மா மலத்தைப்பொருந்தினதினாலே, ஆத்மாவுக்கு காமம், வெகுளி, மயக்கமாகிய முக்குற்றத்தினாலுண்டாம் பிறவிக்கடல் வந்தது. இதற்குச்சுருதி.

"அவாவென்ப வெல்லா வுயிர்க்குமெஞ் ஞான்றுந்
தவாஅப் பிறப்பீனும் வித்து"
என்பதினாலும்,
"மறத்தல் வெகுளியை யார்மாட்டுந் தீய
பிறத்த லதனான் வரும்,,
என்பதினாலும்,
"பொருளல் லவற்றைப் பொருளென் றுணரு
மருளானா மாணாப் பிறப்பு"

என்பதினாலுமறிக. இப்படி மூன்று குற்றத்தையும், பொருந்தி, ஜனனமரணப்படுகிற ஆத்மா எண்பத்துநாலு இலட்சம் யோனிபேதமுந் தனக்குச் சொந்தவீடுபோலே புகுந்து புகுந்துபுறப்பட்டு இருபத்தெட்டுக்கோடிநரகமும், பூமிலேவியாதிமூலமாகிய இடர்களும், சுவர்க்கமுதலான இன்பங்களும் புசித்து, இவைகளிலே கொள்ளிவட்டம் காற்றாடிபோலே சுழன்று சுழன்றே திரிகிறதுயரத்தைக்கண்டு கருணைமேருவாகிய நாதன் தனது காருண்ணியத்தினாலே தாமே குருலிங்கசங்கமமாகித் திருமேனிகொண்டு குழந்தைக்குவந்தவருத்தத்தை தாயே

அறிந்து தீர்ப்பதுபோல நாதன்றானே திருமேனிகொண்டெழு ந்தருளிவந்து இந்தத்தீங்காகிய வழிபடைத்து நல்வழிகாட்டி நற்கதிகொடுத்து இரட்சிப்பர். அதற்குச்சுருதி.

தன்மக்

"குருலிங்கசங்கமத்தைக்கூத்த னுருவென்றே
மருவிதுவேநல்லமருந்து"

என்றும்.

"நல்லநெறியெய்துவதோர்காலந்
தன்னன்பரைக்கண்டின்புறுதல்"

என்பதினுலுமறிக

இந்தக்குருலிங்க சங்கமத்தினுடைய மகிமையைப் பெ த்தாத்மாக்கள் அறியாமையினாலே வழிபாடில்லாமல் இகழ்ச்சியா ய் நினைத்துப் பெருங்குற்றப்படுவார்கள். இது சிவத்துரோக ம். பசுத்துரோகமாவது, பிறவுயிர்களைப் பீடைபண்ணுகிறதும், கொலைபண்ணுகிறதும், பிறதாரம் விரும்புவதும், பரதிரவியமார்ச் சிப்பும், பஞ்சபாதகங்கள் முதலான அநேகதோடி குற்றங்களைச் செய்து இம்மையிலும் மறுமையிலும் பேய்டர்களைத்தானே

அனுபவிப்பன், எல்லா உயிர்களையுந் நிலைப்பன். அந்த உயிர்க
ளுக்குத் தானுமிறையாவான். இதற்குச்சுருதி,

"எனைத்தினாவுயிர்களுமில்லையானவை
தமைத்தினாதொழிந்ததுமில்லை"

என்பதினாலும் அறிக.

இப்படி கோடிவிதம்; இது பசுத்துரோகம். இதுவன்றி
பசு புண்ணியமாவது: தேவலோகங்களை விரும்பி எக்கியாதி
கிருதுக்கள் அசுவமேதயாகங்களைச் செய்தலாம். செய்தவர்கள்
தெவேந்திரப்பட்டமும், அதற்கு மேலாகிய பதவிகளையுமனு
பவித்துப் பின்னும் இந்தப்பிறவிசாகரத்திலே விழுவர்கள்.
மகரிஷிகள், மேலான பதமுத்திகளை விரும்பி அரியதவசுகளை
வெகுகோடிகாலம் வெகுவருத்தப்பட்டுப்பண்ணி, அவைகளுக்
குள்ள பலன்களாக மேலான பதமுத்திகளை வீணே அவலக்கனி
ப்பாகநெடுங்காலமனுபவித்துப் பின்னும் இந்தப்பிறவி சாகரத்தி
லவிழுவர்கள். இப்படிப்பட்டபசுபுண்ணியங்களினாலே உலக
திலுள்ளவாழ்வுகள், இராஜரீகமுதலானமகிமைகளனுபவித்து
ந்தந்தப்பலன் முடிந்தவாறே பிறவிசாகரத்திலே விழுவர்கள்.

ங்ஙனஞ்சொல்லப்பட்ட எக்கியாதி கிருதுக்கள், அரியதவசு கள் மற்றப் பசு புண்ணியங்கள் இவைகளினால் பிறவித்துயர் ங்காதென்பதற்குச்சுருதி.

"முன்னீறுமாதியுமில்லாமுனிவர்குளாய்"
என்பதினாலும்,

"பசித்துண்டுபின்னும் பசிப்பானையொக்கும்"
என்பதினாலும்,

"அக்கனவனைய செல்வமே"
என்பதினாலும் அறிக.

இதுவன்றியும், சர்வான்மாக்களும் சிவனுக்கு ஐக்கிய மாகவே யிருப்பார்கள். அந்தப்பொருளே எடுத்து வளங்குகிற கருவியாகவுமிருக்கும். இந்தச்செய்தியை விட்டுத் தற்போதமே விட்டு இடரைப்பொருந்துவதே பெருங்குற்றமாயிருக்கும். இதற்குச்சுருதி,

"புள்ளிருக்கும்வேளூரான்பொற்கழ
லுள்ளிருக்கவுணர்ச்சியில்லாதவர்
நள்ளிருப்பர்நரகக்குழியிலே"
என்பதினாலும் அறிக.

இவ்வான்மாக்கள் குணங்களையெல்லாம்விட்டுக் குற்றத்தைமாத்திரம் பொருந்தினதற்குத்திருஷ்டாந்தம் எப்படியென்னில், நெய்யரியானது நெய்யைவடிகட்டு மிடத்து நெய்யையெல்லாங் கீழேவிட்டுப்பின் அதிலுள்ள குற்றங்களையெல்லாம் வைத்துக்கொள்ளும். அப்படிப்போல உயிரின்செய்தியெனவறிக. இப்படி ஆத்மலட்சணத்தை விசாரிக்குமிடத்தில் அவ்வான்மா இப்படி அநேக குற்றங்களை யுடைத்தாயேயிருக்கும்.

"தெருளிரவிதெருளுடைய சிறிதேனுஞ்சிலகாணுது"

என்கிற திருவாக்கினலறிக. ஆத்மா கேட்டைப்பொருந்தி இடர்ப்படுகிறதற்குச் சுருதி,

"ஆரிருளாணவத்தோடு"

என்கிற திருவாக்கினலும்,

"நட்டினைன்களையமாட்டேன்"

என்கிற திருவாக்கினலும் அறிக. ஆன்மா பெருங்குற்றப்படுமென்பதற்குச் சுருதி,

"குலம்பொல்லேன் குணம்பொல்லேன்
குறியும்பொல்லேன் குற்றமேபெரிதுடையேன்"
என்கிற திருவாக்கினாலுமறிக.

இப்படி ஆர்மலலக்ஷணத்தைக்கேட்ட மாணாக்கன் சுவாமியைத் தோத்திரம்பண்ணி விண்ணப்பஞ்செய்கிறான். சுவாமீ! அறிதற்கரியபொருளே! அன்பருக்கெளிதானபொருளே! "எங்கெங்குந்தானாய் என்போலுருக்கொண்டு, மங்கும் பிறவிதனைமாற்றவந்த வள்ளலே." சுவாமீ ஒருவிண்ணப்பம்: தேவரீர் திருவுள்ளம்பற்றியருளின ஆர்மலலக்ஷணமெல்லாம் நன்றாய் அறிந்தேன். அதிலே குற்றத்தைமாத்திரங் கட்டளையிட்டருளினீர்: குணமொன்றுங் கட்டளையிட்டருளவில்லையே என்று வினவ சுவாமி திருவுளம்பற்றுகிறார். வாரும்பிள்ளாய் நிலைபெற்றமாணாக்கனே! நீ ஆணவமலத்தைச் சேர்ந்த உயிருக்குச் சற்றுங் குணமில்லையோவென்று கேட்டவினா அந்தகாரத்தைப் பொருந்தின கண்ணுக்குச்சற்றுங் காட்சியில்லையோவென்றும், வேம்புதின்கிற நாவுக்குச்சற்றுந் தித்திப்பு இல்லையோஎன்றும் கேட்டவினாக்களுக்கு ஒப்பாயிருக்கிறதுவென்று சிவஞானபோதக் குறளைகொண்டு அதுவே பெருமகிழ்ச்சியாகவெழுந்தருளியிருக்கி

ற திருவுளக்குறிப்பறிந்த சிஷன் சுவாமீ! அடியேன் வினாவின தெல்லாம் அறியாவினாக்களானதினாலே அந்தஆணவமலத்தினுடையசெய்தியும் அதிலடைந்த என்னுடையசெய்தியும் நன்றாய்த்திருவுள்ளம்பற்றவேணுமென்று விண்ணப்பஞ்செய்ய சுவாமி திருவுளம்பற்றுகிறார். வாரும்பிள்ளாய் மாணாக்கனே, நீ பொருந்தினதின் வசமாயேபோகிறவன். உனக்குச்சொந்தநிலை ஒருநாளுமில்லை. நீ சிவத்தைப்பொருந்தினால் இன்பசாகரமாயேயிருப்பாய். ஒருநாளும் பிரிவேயில்லை. மலத்தைப்பொருந்தினால் இடரையே புசிப்பாய். சற்றுங்குணமேயில்லை. இப்படி ஆணவமலத்தினுடைய செய்தியும் அதிலடைந்த ஆன்மாக்களுடைய இடரையுங் கேட்டமாணாக்கன் சுவாமீ! அடியேனைவிட்டு இந்தக்குற்றம் நீங்குகிறகாலமெப்போது? தேவரீருக்கு அடிமையாகிற காலமெப்போது? என்னாலே எனக்குவந்த கேடு எந்தவிதமாய்த்தீர்த்து இரட்சித்தருளப்படுமென்று பாததாமரையை நமஸ்க்கரித்து பிரதட்சணஞ்செய்து தோத்திரம் பண்ணுகிறான்.

அன்றும் பிரிந்தே னறியாமை யாலிறந்து
மின்றும் பிரிந்தேனே யேழையேன்—றென்றுறைசை

நம்பனையென் வாழ்வினை நாதனையென் கண்மணியை
அம்பலவா ணகுரு வை.

ஆண்டகுருசிற்றம் பலவாவடியேற்காய்
மீண்டுமெழுந்தருளவேண்டாவோ—நீண்டமால்
ஆரணனுங்காணாத ஆனந்தவாரிதியிற்
பூரணமாய்வையாதபோது.

பிறவிப்பெருந்துயராற்றேனடைக்கலம்பேயுலகின்
மறுகித்திரிந்தலைந்தெய்த்தேனடைக்கலம் மங்கைநல்லார்,
குறவைத்தவிர்த்துய்யக்கொள்வாயடைக்கல மூண்
மையன்பர், செறிவுக்குள்வாழும்மெய்த்தேவபஞ்சாக்
கரதேசிகனே.

பழையவடியாருடன்கூடா, தென்னுயகமே
பிற்பட்டிங்கிருந்தேனை யீக்குவிருந்தாயே.

என்று இப்படி இப்படிப் பலபல முறையாகத்தோத்திரம் பிரதட்
சண நமஸ்காரங்கள் பண்ணி மிகுந்த வருத்தத்துடனே வழிய
ட்டுக்கொண்டு நிற்கிற சேஷனைப்பார்த்து, ஆரும்பிள்ளாய் மா

ணுக்கனே, நீ உன்னுடைய குற்றத்தைநோக்கி இடர்ப்படாதே; உன்னுடையசெய்தி,

"குற்றமெல்லாமுற்றிடும் உயிரின்கண்ணே"

என்றிருக்கும்.

நம்முடைய உபகாரம்:

"உயிர்தானுஞ்சுவானுபவமொன்றினுக்குமுரித்தே"

என்னப் பண்ணிவிப்போமென்று அபையப்பிரசாதங்கொடுத்து மிகுந்தவாட்டங்களையெல்லாம் நீக்கி மகிழ்ச்சியைப் பொருந்தப் பண்ணி மாணுக்கனைப்பார்த்து சுவாமி திருவுளம்பற்றுகிறார். வாரும்பிள்ளாய்! இந்த உயிர்களையெல்லாம் சிவபுண்ணியமாகிய வலையிலகப்படுத்திப் பேரின்பவீட்டிலே அடைவிப்போம். அதெப்படி? பஞ்சகிருத்தியப்படுத்தவேண்டி நவந்தருபேதமாகத் திருமேனிகொண்டென்க.

இதற்குச்சுருதி.

"சிவஞ்சத்தி நாதம்விந்து"

என்கிற திருவாக்கிற் கண்டுகொள்க. கர்த்தா ஊட்டி உறக்கி உணர்த்தி இரக்ஷித்த உயிர்களுக்குச் சிவபுண்ணிய

மேற்றவேண்டி மூர்த்தி ஸ்தலந் தீர்த்தமாகத் திருமேனிகொண் டு நிற்பர். அப்படி கர்த்தாதானே சிவபுண்ணியங்களை ஏற்றுகி றபடியினாலே அந்தப் புண்ணியம் புத்தி பூர்வமாதியாகப் பேரி ன்பவீட்டை அடைவிக்கும்படிக்குப் படியேற்றமாகவே முன் செய்த சிவபுண்ணியமுதிர்ச்சியினாலே மேற்பட்டேவளர்ந்தே றிவரும். அது பசு புண்ணியங்களைப்போலப் புசித்துத் தொலை ந்தபின் பழைய பிறவிசாகரத்திலே தள்ளமாட்டாது. சிவபுண் ணியங்களை அபுத்திபூர்வம் புத்திபூவர்மாக ஏற்றுமிடத்துக்கொ ஞ்சமேசெய்தாலும்பெரும்பலனாகவேவரும். அதெப்படி: மாப லி, வாணன், முசுகுந்தச்சக்கிரவர்த்தி இவர்கள்கதைகளினாலும்,

"புண்ணியனைப்பூசித்த புண்ணியத்தினாலே
நண்ணியஞானத்தி னிரண்டினையுமறுத்து
ஞாலமொடுகீழ்மேலு நண்ணுனி
எண்ணுமிகலோகத்தே முத்திபெறும்"
என்பதினாலும்,

"விண்ணுறவடுக்கிய விறகின்வெவ்வழல்"
என்பதினாலும்,

"மாணிபால்கறந்தாட்டிவழிபட"

என்பதினாலும் அறிக. இப்படிப் புண்ணியமேறி மல பரிபாகம்வந்த உயிருக்கு அறிவும் கல்வியும் விளக்கவேண்டித் தாம் வேதாகமபுராணங்களாகத் திருமேனி கொள்ளுவர்.

இதற்குச்சுருதி.

வேதமும் வேள்வியுமாயினார்"

என்கிற திருவாக்கினாலுமறிக. சிவன் குருமூர்த்த மாகத்திருமேனிகொண்டு இப்படிஅறிவுவிளங்கின உயிர்களுக்கு அவரவர் பாகத்துக்குத்தக்கதாய்ச், சமயதீட்சை விசேடதீட்சை பண்ணி சரியை, கிரியை, யோகங்களை அனுஷ்டிப்பித்துச் சா லோகாதிபதங்களைப்புசிப்பித்துப் பின்பு மோட்சம்வேணுமென் கிற பெருவிருப்பம் வரும்படிக்கு அவருள் நின்றுணர்த்துவர். அ ப்படி உணர்ந்த உயிர்கள் சுவர்க்காதிபதமுதல் மேலானபதமுத் திகளெல்லாம் கான்றசோறுபோலவும், புண்ணியபாவமிரண்டு ம் பொன்விலங்கு இருப்புவிலங்குபோலவும், சரீரம் சர்ப்பம்போ

லவுங் கண்டு சாலோகாதி பதங்களிலேயுஞ் சற்று விருப்பமில்லாமல்நீங்கி அப்படியே காட்சிப்பட்டபோகம், கேட்கப்பட்ட போகங்களிலே சற்றும் விரும்பாதிருப்பர்கள்.

இதற்குச்சுருதி.

"பெய்த்தேர் போலில்லையாய்"

என்பதினாலும்,

"மற்றுந்தொடரப்பாடெவன்கொல்பிறப்பறுக்க
லுற்றார்க் குடம்பு மிகை"

என்பதினாலும் அறிக. இப்படிப் பரிபாகப்பட்ட ஆன்மாக்கள் முத்தியைவிரும்பிச் சிவனைப்பெறவேணுமென்கிற வினாவுடனே மகுடத்தையுடைய சர்ப்பத்தைப்போலச் சிவனைக்கண்டபேர் கேட்டபேர் எங்கேயிருப்பார்களென்று தேடி ஊணுறக்கமின்றி வருந்துவர். இதற்குச்சுருதி.

"தேடிற்றிலேன் சிவனெவ்விடத்தான்"

என்பதினாலுமறிக. இப்படி உண்ணின்று பாகப்படுத்திவித்துப் பின்புவெளிப்பட்டு ஞானதேசிகன், வானோர்க்கரியமரு

ந்தாகிய நாதன், எஞ்ஞோர்க்கெளிய இறைவனுகி அவனியிற்சேவடி தீண்டும்படிக்கு மிகுந்த புல்லறிவினையுடைய என்னையும் ஆளவேண்டி என்போலுருக்கொண்டு நாயைச்சிவிகையிலேற்றினதுபோல் அடியேனையும் ஒரு பெருளாகமதித்து சந்நிதியில் வரவழைத்து ஆசனத்திருத்தி அருளோக்கப்பாலித்து உத்தரங்களுக்கெல்லாம் மேலானவுத்தரமாய், மந்திரங்களுக்கெல்லாம் மேலான மகத்துவமாய், ஆன்மாக்களை வீட்டின்பத்திலே அசைவற நிறுத்துகிற வசனமாயிருக்கப்பட்ட ஓர்வார்த்தையை பாகம்பார்த்து திருவாய்மலர்ந்து அனுக்கிரகம் பண்ணினர். அந்த மெய்த்தேசிகனுடையதிருவருட்பெருமையை அறிந்தாரார்? அவருடைய திருவார்த்தையினுடைய வல்லபத்தை அறிந்தாரார்? அந்த அனுக்கிரகத்தைப்பெற்ற சீஷன் நிலைபெற்ற கலைஞானமும், சிவ்ஞானமும்பெற்றுச் சிவபோகத்தைஅடைந்தின்புற்றன்.

இதற்குச் சுருதி.

"என்னையோர் வார்த்தையுட் படுத்தும்"

என்பதினலறிக.

"அல்லார் பொழிற்காழி"

என்பதினாலுமறிக. இப்படி நிலைபெற்ற சீஷனுடைய அனுபூதிக்காக்ஷி எப்படி யென்னில் உடலுஞ்சிவம், உயிருஞ்சிவம், உயிர்ப்போதமுஞ்சிவம், ஆணுஞ்சிவம் பெண்ணுஞ்சிவம், உருவுஞ்சிவம், அருவுஞ்சிவம், அப்பாலுஞ்சிவம், கண்டகாட்சியுஞ்சிவம், கேட்டகேள்வியுஞ்சிவம், அணுவுக்குளணுவுஞ்சிவம், மேருவுக்குள் மேருவுஞ்சிவம், அண்டபிண்டகளுஞ்சிவம், அப்பாலைக் கப்பாலுஞ் சிவம், எப்பாலுஞ் சிவம், எப்பொருளுஞ்சிவம், எப்பொருளையும் ஆக்குவதுஞ்சிவம், சிவமே யென்கிற உண்மையை அசைப்பதுவுஞ் சிவம், அளிப்பதுவுஞ் சிவம், இப்படி எல்லாஞ் சிவமேயென்கிற உண்மையை மாசறு காட்சியாகக்கண்டு அந்த ஆனந்தத்திலே வாழுகிற மாணாக்கன் சுவாமியிடத்திலே ஒரு விண்ணப்பஞ்செய்கிறான். சுவாமீ! அடியேன் இந்தமேலான இன்பத்தைப் புசிக்கிறபொழுது ஒன்றாய் நின்று புசிப்பேனோ இரண்டாய் நின்று புசிப்பேனோவென்று வினவ சுவாமி திருவுளம் பற்றுகிறார். வாரும் பிள்ளாய், நிலைபெற்ற மாணாக்கனே! நீ சொரூபதரிசனம் பண்ணி நாயனடிமைத்திறமாகிய உண்மையை அறிந்து அந்தப்பொருளிடத்திலே வழிபட்டு இன்பத்தையே புசிக்கப்பட்ட உ

னக்கு ஒருபொருளென்று காட்சியுண்டாகாது.

அதற்குச்சுருதி.

"அன்பினாலின்பமார்வார்"

என்கிற திருவாக்கினால் அறிக. இரண்டு பொருளென்று சொல்லுவாயானால் சுவாமி சருவத்திர பரிபூரணமாய் உயிர்க்குயிராயிருக்கிற உண்மையைத் தரிசித்தவனன்று. இப்படி யொன்றென்றும் இரண்டென்றும் சொல்லுகிற சமையத்தார் அநேகர் உண்டு. அவர்கள் நற்கதியடைந்தவர்களல்ல. ஆனால் ஒன்றுமல்லவாய் இரண்டுமல்லவாய் அத்துவிதமாய் நின்று அந்த ஆனந்தத்தைப்புசிக்கிறதற்குச் சுருதி.

"பாலொடு நீராயினார்"

என்பதினாலும்.

"ஆதவன்றன் சந்நிதியிலம்புலியினார்சோதி
பேதமறநிற்கின்ற பெற்றிபோ—லோதாந்தத்
தண்ணல் திருவடியி லான்மா வணைந்தின்பக்
கண்ணிலமுழ்ந்தியிடுமென்"

இதுவன்றியும்.

"ஒன்றென்றுசொல்பவர் சொன்னாலுஞ்சொல்லுக வொன்றிரண்டா, மொன்றென்றுசொல்பவர் சொன்னாலுஞ்சொல்லுக வேற்றியன்பு, சென்றங்கு நல்குசிற்றம்பல நாடிசிவபுரத்தோ, னன்றென்றி தாமென்றுசொல்லாத முத்தியளித்தனனே"

என்பதினாலுமறிக.

இப்படி இந்தநிலையே பிரிவற்ற பேரின்பவீடும் பேரானந்தப் புசிப்புமென்று திருவுளம் பற்ற மாணாக்கன் சுவாமியைதோத்திரம் பண்ணுகிறான்.

"இருவினைதாமிவைமும்மல மீங்கிவையீது சிவங்
கருவுறுமாருயிருண்மை யிதுவென்று காட்டவல்ல
குருபானீயன்றிவேறறியேனிக்குவலயத்திற்
றிருவெண்ணெய்மெய்கண்டதேவே பஞ்சாக்கரதேசிகனே"

"சீருந்திருவும்பொலிய"

என்பதினாலும்.

"தன்னடியவர்க்கு மூலபண்டாரம்வழங்குகின்றான் வந்துமுந்துமினே"

என்றும் இப்படி ஞானதேசிகனுடைய வருமையைநோக்கி நோக்கி நைந்துநைந்துருகி யின்புற்றுச் சீவன்முத்தித்தன்மையாகவும் பரமுத்தித்தன்மையாகவும் இன்பசாகரத்தைப்பொருந்தி வாழுகிறமாணாக்கன் சுவாமியைப்பார்த்து, சுவாமீ! தேவரீருடைய திருவருளானது அநாதிமுதலிற்றைவரையும் உயிர்த்துணையா யடியேனுடைய பிறவிசாகரத்தைக்கடத்தி இன்பசாகரத்திலேவைத்தது, அத்திருவருள் எங்கேயென்றுவினவ, சுவாமி திருவுளம்பற்றுகிறார்; வாரும்பிள்ளாய்! உன்னை பஞ்சகிருத்தியப்படுத்துகிறபோது திருவருளினாலே மறைந்து நின்று கிருத்தியப்படுத்துவோம். நீ ஆநந்தத்தை புசிக்கிறபோது திருவருள் நமக்குள்ளேயடங்கி நிற்குமல்லாது திருவருளுக்குஞ் சிவத்துக்கு மொருக்காலும் காட்சியில்லையென்று சுவாமி திருவுள்ளம்பற்றக்கேட்ட மாணாக்கன் சுவாமியைப்பார்த்து மெய்யர்க்கு மெய்யனாகிய மெய்ப்பொருளே, தேவரீர் கட்டளையிட்ட மெ

ய்வசனந் திருவருளுஞ் சிவமுங் குணகுணிப் பொருளாயுமிருக்க உயிர்களுடைய பாகத்துக்குத்தக்க காட்சியாகவிருக்கிற உண்மையைக் காட்டக்கண்டு களிப்புற்றேன்; சுவாமீ! இன்னம் ஒரு விண்ணப்பம், தேவரீர் அடியேனையுமொருபொருளாய் மலபரிபாகப்படுத்தி வீட்டின்பத்திலேவைத்து இரட்சித்தருளினீர். ஆணவமலம் அடியேனிடத்திலே அத்துவிதமாயிருக்கவும் தேவரீர் மலபரிபாகப் படுத்தினேம் என்று திருவுளம் பற்றினது எந்தவிதமோ? இப்படி மலசிற்கையினாலே பழையபிறவி சாகரத்திலே தள்ளிவிடுமே என்று மிகுந்த அச்சமாயிருக்கிறதென்று நடுக்கத்துடனே விண்ணப்பஞ்செய்ய, சுவாமி திருவுளம் பற்றுகிறார், மாணாக்கனே! நீ பண்ணின தவத்தினாலே சிவத்தைப்பொருந்திச் சிவமாகியும் அந்தச்சிவத்துக்கு நீ திருமேனியாகியும் பெருவாழ்வைப் பொருந்தி வாழுகிறவன். உன்னை ஒரு காலமும் மலந்தொடரமாட்டாது. நீ இந்தப்பெருவாழ்வைவிட்டு நீங்குகிறதுமில்லை.

அஃதெப்படி? ஒளிக்குமிருளுக்குமொன்றே இடமாயிருந்தாலும் ஒளி மேலிட்டகாலம் இருளடராது அடங்கியே போமென்பதினாலறிக. இதற்குச்சுருதி.

"ஒளியின்முனிருளு ஈசமடைந்திடா மிடைந்திடாவே"
என்பதினலறிக.

ஞானதேசிகனுடைய அனுக்கிரகம் பெற்ற சாதாக்களு க்குப்பிறவியில்லை என்பதற்குச் சுருதி.
கறுத்தவிரும்புகனகமதானல் மறுத்திரும்பாகா வகை யதுபோல"

என்கிற திருவாக்கினலும்.

"கண்டத்தைக்கொண்டு கருமமுடித்தவர்
பிண்டத்தில்வாரா ரென்றுந்தீபற
பிறப்பிறப்பில்லை யென்றுந்தீபற"
என்பதினலுமறிக.

இப்படி ஞானதேசிகனுடைய அனுக்கிரகத்தைப்பெற்று அச்சங்களெல்லாம் தீர்ந்து மகிழ்ச்சியைப்பொருந்தி வாழுகிற மாணக்கன் பின்னும் ஓர் அச்சந்தோன்றியதால் ஒருவிண்ணப் பஞ்செய்கின்றான்.

சுவாமீ! அடியேனை பேரின்ப நிலையிலே நிறுத்த, இந்த

ப்பேரின்பத்திலே நிற்கிற என்னை வாதனையானது பழைய பிற விக்காட்டிலே இழுக்குமென்ற அச்சம்மிகுதியாயிருக்கின்றதே என்று வினவ உனக்குவாதனை தாக்காதபடிக்கு உபாயஞ்சொல்லுகிறோம் கேளென்று திருவுள்ளம் பற்றுகிறார். உனக்கு வாதனைமேலிட்டால் நீ பரம்பொருளைவந்திக்கிறதினாலும், பஞ்சாக்ஷரத்தை ஆசாரியரனுக்கிரகப்படிக்கு ஜெபம்பண்ணி நிற்கும் நிலையில் நிற்கிறதினாலும், அந்தவாதனையானது உனக்குப்பொருந்தமாட்டாது. இதற்குச்சுருதி.

"தங்களோமின்பத்தடங்கடலில்மூழ்குவித்தோம்"
என்பதினாலும்.

"அந்தமாதிகளிலாத வஞ்செழுத்தருளினாலே
வந்தவாறலைசெய்வாரை வாதியாபேதியாவே"

சுவாமீ! தேவரீர் நாதங்கடந்த பொருளாகவும் நின்றீர்; பூதங்களிலேயு நிறைந்து நின்றீர்; யாவருக்கும் அறிவரிதாகவும் நின்றீர்; எனக்கு எளிதாகவும்நின்றீர்.

அடியேன் கண்டு என்னவென்று தோத்திரம் பண்ணப் போகிறேன்.

சுவாமீ! தேவரீருடைய திருக்கூத்தின்முறைமை எப்படி என்று வினவ சுவாமி திருவுள்ளம்பற்றுகிறார்.

நம்முடைய திருக்கூத்து, கேவலத்திலேகிடக்கிற ஆத்மாக்களை சகலத்திலே விடுவதாயும், சகலத்திலே கிடக்கிற ஆத்மாக்களை முத்தியிலே வைத்து இன்பம் புசிப்பிக்கிறதாகவுமிருக்கும்.

இதற்குச்சுருதி,

"கள்ளிருளினட்டம்பயின்றுடுகாதனே"

என்பதினாலும்.

"சிதம்பரந்தரிசிக்க முத்தி"

என்பதினாலும்.

"முத்திபெறத் திருவுளமுகிழ்த்தபெருங் கருணையினால்"

என்பதினாலும்.

"மோனந்தமாமுனிவர்"

என்பதினாலும் அறிக.

இதுவன்றி சடசித்துக்களை யெல்லாம் அசைக்கிற தாகவுமிருக்கும்.

"அவனன்றியோரணுவுமசையாது"

என்ற திருவாக்கிற் கண்டுகொள்க.

சுவாமீ! குன்றவிலாநிறைவே! குணக்குன்றே! கோதிலாவமுதே, என்னுயிர்த்துணைவா, தேவரீர் திருவுள்ளம்பற்றின திருக்கூத்து முறைமையை நன்றாய்த் தரிசனம் பண்ணினேன். இன்னம் ஒரு விண்ணப்பம்: அடியேனுடைய புசிப்பாகவிருக்கப்பட்ட இழிந்த பொக்கிஷத்தைப் பறித்துக்கொண்டு, நின்மலமாய் நிட்களமாய், மிகுந்த மேன்மையாயிருக்கிற, தேவரீர், புசித்தருளப்படுமோ? ஆம். எப்படியெனில், நீ பேரின்பத்தையே புசிக்கிறபடியினாலே, மற்றொன்றைப் புசிக்கமாட்டாய். உன்னுடைய சுகதுக்கங்களை நாமே புசிப்போம். அதுவல்லாமலும் நீ தற்போதமிறந்து சிவத்தைப் பொருந்திப் பாலொடு நீர்கலந்தாற்போல, சிவசாயுச்சியத்தைப் பெற்றபடியினாலே, உனக்கு உலகவாழ்வுகள் ஒன்றிலேயுஞ் சற்றும் வியாத்திவாரது. ஆனபடியினாலே, உன்னுடைய உடல், உயிர், தொழில்கள், புசிப்பு இவைகளிலே வருகிற சுகதுக்கங்களை உனக்குயிர்க் குயிராயிருக்கிற

நாமே புசிப்போம். உயிர் சிவத்தையே பொருந்தி சிவபோகமே புசித்தற்குச் சுருதி.

"உயிர்தானுஞ் சுவாநுபவ மொன்றினுக்கு முரித்தே"
என்பதினாலும்,

"உறுந்தொழிற்குத் தக்கபயன் உலகர்க்குத் தத்தம்
வறுந்தொழிற்கு வாய்மை பயன்"
என்பதினாலும்,

"ஓங்குணர்வகத்தடங்கி யுள்ளத் துளின்பொடுங்கத்
தூங்குவர் மற்றேதுண்டு சொல்"
என்பதினாலுமறிக.

இதுவன்றியும், நிலைபெற்ற மாணாக்கனே! உன்னுடைய பிராரத்துவம் நமக்குப் பிறவுயிர்களை இரட்சிக்கும்படி நல்லமருந்தாகவேயிருக்கும். நீ நல்ல ஞானவானானதினாலே உன்னிடத்திலே வழிபட்ட பிறவுயிர்கள் நற்கதியைவிரும்பி அன்னவஸ்திரம் ஆபரண முதலானதுங் கொடுத்து, பாதபணிவிடை, ஏவற்பணிவிடை முதலான பணிவிடைகளுஞ் செய்கிறதினாலே

அந்தப் பிறவுயிர்கள் பொருந்தும் மீறு செனனத்திற்று னே சகல துரிதமுநீங்கி ஆசாரியரநுக்கிரகத்தைப் பெற்று சாயு ச்சியத்தைப் பெறுகையினாலும், அந்தப் பிராரத்துவம் நாமே புசி க்க வேண்டுமோனதினாலே அந்த ஞானவான்களுடைய மகத்து வம் எந்த வந்த நூலினாலேயும் எப்படி எப்படி விசாரித்தாலும ஒருவராலேயும் அறியப்படாது.

இதற்குச்சுருதி,

"சிவஞானச் செயலுடையோர் கையிற்றானந்
திலமளவேசெய்திடினு நிலமலைபோற் றிகழ்ந்து"

என்பதினாலறிக.

அவர்களுடைய திருமேனியில் நடக்கிற உட்டொழிலு ம், புறத்தொழிலும் அதனாலே வரப்பட்ட சுகதுக்கங்களும் சிவ பெருமானே என்றுகொள்வர்.

இதற்குச்சுருதி,

"இவனுலகிலிதமகிதஞ் செய்தவெல்லா
மிதமகித மிவனுக்குச்செய்தார்பாலிசையும்"

என்பதினாலும்,

"கண்ணினால் விடையக்தன்னை"

என்பதினாலும்,

"உண்மையாஞ் சுவாநுபவர்"

என்பதினாலும்,

"அபரிவறுத்திட்டஞானி"

என்பதினாலும் அறிக.

அதுவன்றியும் ஞானவான்களுடைய அருமை சிவனுக்கே தெரியும் சிவனுடைய சுபாவம் ஞானவான்களுக்கே தெரியும்.

இதற்குச் சுருதி,

"நம்பர்தாமளத்தலன்றி நாடிலாரளக்கவல்லார்"

என்பதினாலும்.

"ஏவணச்சிலையினானை யார்தொடர்ந்தெட்டவல்லார்"

என்பதினாலும் அறிக.

சுவாமீ!

"என்பிறவித் துன்பறுக்க வென்றோ சிற்றம்பலவா
நன்பிறவி யென்போல நண்ணினாய் நாதனே"

அடியேனுடைய சுகதுக்கங்கள் அடியேனுக்கில்லை என்பதும் தேவரீர்புசித்தருளுகிற உபகாரமும் கனவாய் அறிந்தேன. இந்தப்பிராரத்துவத்தைத் தேவரீர் இச்சைப்பட்டதினாலே தேவரீருக்குத் தற்பிரயோஜனம் இன்னதென்றும், அது புசிக்கிற வல்லபமும் திருவுளம்பற்ற வேணுமென்று விண்ணப்பஞ்செய்ய சுவாமி திருவுள்ளம்பற்றுகிறார். மாணக்கனே! நமக்கிச்சையாவது உயிர்களை முத்தியிலே விடவேணுமென்கிறதேயாம். நமக்கு ஞானமாவது, உயிர்கள் நாடோறும் ஆர்ச்சிக்கப்பட்ட கன்மத்தை அறிந்து புசிப்பித்துத் தொலைப்பிப்பதேயாம். கிரியையாவது, உயிர்களுக்கு மலபரிபாகம் வரும்படிக்குக் கிருத்தியப்படுத்துகிறதேயாம். அதுவன்றி ஆலயங்கடோறும் பூசை நைவேதநியம், திருப்பணி உற்சவாதிமுதலான பணிவிடை கொண்டருளுகிறதும் உயிர்களைக்குறித்தல்லாமல்நமக்கெனத்தற்பிரயோஜனம் ஒன்றுமில்லை.

இதற்குச்சுருதி.

"இன்பதனையெய்துவார்க் கியுமவர்க்குருவ
மின்பகன்மாதவினலில்"

என்பதினாலும்,

"அத்தாவுன்னடியேனை யன்பாலார்த்தாய்"
என்பதினாலும் அறிக.

இப்படி மேலான உண்மைவசனத்தைக் கேட்ட மாணாக்கன் சுவாமியைப்பார்த்து சுவாமீ! அடியேன் சிவபோகம் புசிக்கவேண்டித் தேவரீர் அடியேனுடைய பிராரத்துவம் புசிக்கவேண்டிற்றே; அந்தப்பிராரத்துவம் அடியேனிடத்திலே வருகிற முறைமையும், அந்தப்பிராரத்துவம் தேவரீர் புசித்தருளுகிற விதமும் கட்டளையிட்டருள வேணுமென்று விண்ணப்பஞ்செய்ய சுவாமி திருவுள்ளம்பற்றுகிறார். மாணாக்கனே, பிராரத்துவமாவது சத்தாதி விடயங்கள் தொழிற்படுத்து நலமிடலாகும். அந்தத்தொழிலிலேவரப்பட்ட சுகதுக்கமெல்லாம் உயிரையே பொருந்தும். தொழிலெல்லாம் உடலையே பொருந்தும். அந்த உடலிலேயும் உயிரிலேயும்கருத்தா பொருந்தியேநின்று புசிப்பார்.

அந்தச்சுகதுக்கங்களை உயிரனுபவிக்கிறது எப்படி என்னில் அது அற்ப போகமுதல் சொர்காதிபதம், மேலான பதமுத்திகளிலேவரப்பட்ட இன்பதுன்பங்களிலே பொருந்தி அதிலழுந்தி வீணே அவலக்களிப்பி லகப்பட்டுக் கன்மத்துக்குத் தக்

கதாய் நெடுங்காலந் திரிபுக் காட்சியினாலே இத்தைச் சுகமென்றே கருதிக்கிடக்கும். மேலும் அற்பமான துக்கமுதல் ரௌரவாதி நரகம்வரையில் வரப்பட்ட துன்பங்களுக்கும் அளவையில்லை. சப்தசமுத்திரத்தைஅளவுசொன்னாலுஞ்சடாகாது. இப்படி அளவையில்லாத சுகதுக்கங்களை உயிர் புசிக்கும்.

இந்தக்கன்மத்தைக் கருத்தா கூட்டிவைத்துப் புசிப்பிக்கிறதெல்லாம், கொண்டநோய்க்கு மருந்தாகவும், செய்தகுற்றத்துக்குச் சிட்சையாகவும் இருக்குமல்லாமல் வேறன்று. இதற்குக் காரணமாகிய ஆணவமலஞ் சற்றுங் குறையாது. அந்த ஆணவமலத்தைத் தீர்க்கவேண்டி நம்முடைய சற்குருதேசிகன்தானே அம்பலவாண சுவாமி என்று திருநாமஞ்சாத்திக்கொண்டு உண்மையை அநுக்கிரகம் பண்ணிப் பேரின்பவீட்டை அடைவிக்கிறகாலம் மலநீங்குமல்லாது மற்றொரு மருந்தினாலும் ஒருகாலமுந் தீராது.

இதற்குச்சுருதி.

"மந்திரமுந் தந்திரமு மருந்துமாகித்
தீராநோய் தீர்த்தருள வல்லான்"

என்பதினால் அறிக.

உன்னுடைய பிராரத்துவத்தை நீ தற்போதத்தினால் புசித்ததினாலே வருகிற குற்றமும், காத்தாவுடைய உபகாரமும் சொன்னோம். இனி உன்னுடைய பிராரத்துவம் நாம் புசிக்கிற உபகாரத்தைச் சொல்லுகிறோம் கேட்பாயாக என்று அநுக்கிரகம் பண்ணுகிறார்.

நின்மலமாய் நிஷ்களமாய் ஒன்றிலேயுந் தோய்வற்றிருக்கிற நாம் கருணையினாலே உன்னுடைய பிராரத்துவம் புசிப்போம். குருலிங்க சங்கமமாகவிருந்து பூசை நிவேத்தியமுங் கொண்டருளுவோம். எல்லாவற்றையுமறிவோம். எல்லாத்தொழிலையுஞ்செய்வோம். சகல துன்ப இன்பங்களிலேயுங் கலந்தேயிருப்போம். உடலினு முயிரினும் பொருந்தி நிற்போம். இப்படி நின்று உபகரித்தாலும் நாம் மாசற்ற சோதியானதினாலே நம்மை ஒன்றுஞ் சேட்டியாது.

"ஊனாகி யுயிராகி யுலகமுமாகி யுலகுக்கப்பா
லானாதவடிவாகி நின்றார் செய்யவடிபாவி"

என்பதினாலும்,

"எல்லாயா யல்லவுமாய்"

என்பதினாலும்,

"தன்மொழிலே மன்னுவிப்பன் விகாரங்கண் மருவான்"

என்பதினாலுமறிக.

இப்படிப்பட்ட ஆகமவசனத்தைக் கேட்ட மாணாக்கன், தன்குற்றத்தினாலே அநாதிமுதல் இற்றைவரை அனுபவித்த இடையும், ஞானதேசிகன் இப்போது பேரின்பநிலையிலே நிறுத்திய அருமையையும் நோக்கித் தோத்திரம்பண்ணி விண்ணப்பஞ் செய்கிறான். அடியேன் இற்றைவரையும்பட்ட இடர் ஒரு கைவாய்க்கால் நீந்தினதுபோலவும் இனி அநுபவிப்பதற்குள்ள இடர் உகாந்தப் பெருவெள்ளம் நீந்துகிறதுபோலவும் இருக்கிறது. ஆனால் என்மனம்பேய்க்குரங்கு. எனக்குத்துணையாகிய ஐவரும் பெரும்பகைஞர். இவ்விடர்களில் அழுந்திக்கிடந்த என்னைத் தேவரீர் ஓர் பொருளாய்மதித்துப் பெருங்கருணையினாலே திருநோக்கம் பாலித்தருளினீர். அந்தப்பெரும்பேறு ஆர் பெறுவார் என்று தேசிகசிகாமணியின் திருவடியைச் சிரசிலே சூட்டிக்கொண்டு தோத்திரம்பண்ணுகிறான்.

மொழுக்குண்டபொன்னி னுருத்தெரியாதுவிழுங்கவல்ல
வழுக்குண்டினை குடியேனை யாட்கொண்டருட்கடலி
ன்
முழுக்குண்டுநிற்கச்செய்தாய்க்கேதுரைப்பன்முகமனரு
பழுக்குந்துறைசையுளப்பலவாண பரமபொருளே (ள்

ஞானதேசிகனுடைய உபகாரத்துக்குக்கைமாறில்லை.

சுருதி

“கடையேனைத்தொண்டாகக்
கொண்டருளுங்கோகழியெங்கோமாற்கு நெஞ்சமே
உண்டாமோ கைமாறுரை”

என்பதினாலும்,

“கைமாறுவேண்டா கடப்பாடுமாரிமாட்
டென்னாற்றுங்கொல்லோ வுலகு.

என்பதினாலுமறிக.

ஞானதேசிகன் திருநோக்கம் பாலித்த உயிர்கள் பேரி
ன்பத்தையடையும்.

சுருதி,

தானென்னைப்
பார்த்தான் பழையவினைப்பஞ்சமலக் கொத்தையெல்லா
நீத்தான்.

என்பதினாலும்,

கண்ணருளானோக்கிக் கடியபிறப்பாற்பட்ட
புண்ணுமிருவினையும் போயகல

என்பதினாலும்,

சேர்வையார்தொண்டரிடஞ் சேருர்பவக்கடலைப்
பார்வையான்மாற்றிப் பதியாக்கிவைத்தானே.

என்பதினாலுமறிக.

அவ்வாறு திருவருளால் பேரானந்தத்தைப் பொருந்திய மாணாக்கன் சுவாமியைத் தோத்திரம் பண்ணுகிறான்.

அல்லலறுத்தவைபாரீரண்ணலிருந்தவைபாரீர்
சொல்லைவிடுத்தவைபாரீர்சோதியெறித்தவைபாரீர். (க)

என்னையளித்தமைபாரீர் என்னுள்ளிருந்தமைபாரீர்
தன்னையளித்தமைபாரீர் தகைவறநின்றமைபாரீர் (௨.)

ஆசையகன்றமைபாரீர் ராணவம்விட்டமைபாரீர்
தேசுநிறைந்தமைபாரீர் தேசிகதேசனைப்பாரீர் (௩)

போதமிறந்தமைபாரீர் பூரணமானவைபாரீர்
வேதமுடிவனைப்பாரீர் மெய்கண்டநாதனைப்பாரீர் (௪)

அறிவுக்கறிவனைப்பாரீ ரறிவுக்கதீதனைப்பாரீர்
செறிநைக்கினியனைப்பாரீர் தேசிகதேவனைப்பாரீர் (ரு)

சேரப்படைத்தமைபாரீர் சேரவளித்தமைபாரீர்
சேர்த்துடைத்தமைபாரீர் செய்யாச்செயறனைப்பாரீர் சு

உள்ளும்புறம்பனைப்பாரீர் ஒருதன்மையாளனைப்பாரீர்
தெள்ளத்தெளிவனைப்பாரீர்தேறவிற்றேறனைப்பாரீர் (எ)

செப்பரியவுண்மைச் சிவஞானதேசிகரா
யிப்படியேவந்திங்கிருந்த தரிசனமே (அ)

தேனடருமானந்தஞ் செங்கமலத்தாளருள
மானிடர்போல்மண்மிசையில் வந்தததிசயமே (௬௯)

என்றுமருவுருவா யெங்குநிறைந்தவர்தா
மின்றெமக்குத் தேசிகராயெய்ந்தததிசயமே (௭௦)

போக்குவரவற்றிருக்கும் பூரணர்தாமண்மிசையி
லாக்கையுடன்வந்த தறவுமதிசயமே (௭௧)

எங்குநிறைந்தவர்தா மேகவுருவாகிச்
செங்கமலத்தாள்வணங்கச் சேர்தந்தததிசயமே (௭௨)

இப்படிநிலைபெற்றுநின்ற தேசிகனைத் தோத்திரம்பண்ணி னைந்து னைந்து உருக உருக மேலான இன்பசாகரம் இவனைக் கௌீகரித்துக்கொள்ள இவனும் அந்த இன்பத்தைப்பொருந்தி இன்பமாகநிற்கிற நிலையே முத்திநிலை. இந்தநிலை பரமுத்தியென்றுஞ், ஜீவன் முத்தியென்றும், இரண்டுவிதமாம். இந்த இரண்டு விதமுந் திருவருட்டொழிலே யன்றி வேறன்று.

பாலொடு நீர் கலந்ததுபோலவும், சந்திரப்பிரகாசஞ் சூரியப்பிரகாசத்திலே கலந்து நின்றதுபோலவும், உயிர் சிவத்து

டன் அத்துவிதமாய் இரண்டற்று நின்று சிவபோகத்தைப் புசித்துக்கொண்டேயிருக்கும்.

இதற்குச்சுருதி,

"வாசியினடைநிற்கைவழக்கு"

என்பதினாலும்,

"மாசில்வீணையு மாலைமதியமும்"

என்பதினாலும்,

"போதநிலைமுடிந்தவழி புகவொன்றியுடனானார்"

என்பதினாலும்,

"ஒன்றிநின்றுணருமுண்மைக் குவமையாரணவத்தோ டொன்றே"

என்பதினாலுமறிக.

ஞானவான்களுடைய திருமேனி இருந்தாலும் நீங்கினாலும் அவர்கள் இந்த நிலையும் இந்தப்புசிப்பும் ஆனந்தமுமாகத்தானிருப்பார்கள்.

சுருதி,

"சிறைசெய்யநின்ற"

என்பதினாலுமறிக.

இந்த நிலைதான் முத்தி என்றும், மோட்சமென்றும், பேரின்ப வீடென்றும், சாயுச்சியமென்றும், திருவடி சேர்தல் என்றும், வேதாகமபுராண சாஸ்திரங்களிலெல திருவுள்ளம் பற்றியருளினது.

பரமுத்தியாவது:— ஆன்மா சிவபோகம் புசிக்குமிடத்து ஞாதுரு ஞானம் ஞேயமிறந்தே புசித்தலாம்.

சுருதி,

"குன்றுவருள்முலந்திகழ"

என்பதினாலும்;

"மையார்குழலுமைபாகன் வழிபாடுமறந்தே"

என்பதினாலும்,

"பருவான்மலத்தினாலே"

என்பதினாலுமறிக.

சீவன் முத்தியாவது:— ஒடுங்கி நிலைபெற்று, பெரியோர்கள் கருத்தாவினுடைய பிரேரகத்தால் பூசைமுதலிய பணிவிடையுங் கொண்டருளி அங்கத்தைப் பூம்பாவையாக்கல், முத

லைவாய்ப் பிள்ளை வரவழைத்தல், புத்தர்கள் வாக்குத் தம்பிக்கச் செய்தல் போன்ற பலதிருவருட்டொழில்களிற் பொருந்திநிற்கும் நிலையாம்.

இந்நிலை யடைந்த மஹான்களும் பேரின்பவீட்டைப் பொருந்திப் பேரானந்தத்தைப் புசித்துப் பெருங்களிப்புடனே வாழ்ந்திருப்பார்கள். இவர்கள் கருவி கரணங்கள் தொழிற்பட்டபோது வழிபாடு செய்வதும் மற்ற வேலைகளில் தாம் பெற்ற சிவபோகம் புசிக்கிறதுமாக விருப்பர்.

அன்றியும் பேய்பிடிகொண்டவர்போலவும், உன்மத்தர் போலவும், இராசகுமாரர்போலவும் திரிவர். இப்படி எந்நிலையைப் பொருந்தினும் அவர் தம் நிலை பிரியாமல் வாழ்வர் என்று தேசிகர் அருளிச்செய்ய மாணக்கன் சுவாமீ! அடியேன் ஓர் விருப்பமுறுகின்றேன், அதாவது தேவரீர் சந்நிதானத்தில் நீங்காமல் நிலைபெற்றிருந்து தேவரீர் திருமுகத்தாமரையையே நோக்கித தரிசனம் பண்ணிக்கொண்டே யிருக்கவேணுமென்றதுதான். அதற்குத்தேசிகர் மாணக்கனே, நீ உன்னுடைய சிவபுண்ணிய வினைவினாலே மேலான நிலையை விரும்பப் பெற்

ரும் இந்த நிலையைப் பொருந்தி வாழுகிறதே பெருவாழ்வு, நா
ம் மெய்யடியார் குழாத்திலே நீங்காமல் இன்புற்றிருப்போம்.
அவர்கள் நமது ஆனந்தத்திலே மூழ்கி ஆனந்தக்களிப்போடு தி
ருவிளையாடல்கொள்வர்கள்; நாமும்அவர்களுடனே பிரிவின்றி
விளையாடி நிற்போம் என்று அருளிச்செய்தார்.

சிஷன் தேசிகரது சந்நிதிவிட்டு நீங்காமலிருக்க வேணு
மென்பதற்குச் சுருதி.

"முத்தாவுன்றன் முகவொளிநோக்கி"
என்பதிருவுறிக.

நாம் அண்டங்கடந்தபொருளாகவும் நூலுணர்வுக்கெட்
டாத பொருளாகவும் ஐந்தவத்தையுங்கடந்த பொருளாகவும் இ
ருக்கிறோம். ஆனாலும்மெய்யடியார் குழாத்தில் நீங்காமலிருப்
போம். இதற்குச்சுருதி.

"மாசிலடியார்கள் வாழ்கின்றவூர்சென்று தேடிவிளை
யாடியங்ஙனே"

என்பதினாலுமறிக.

ஆகையால் நீ மெய்யடியார் குழாத்திலே அன்புடனே
சென்று கலந்திருந்தால் நம்மை நீங்காத காட்சியாகக் காணப்

பெறுவாய், நாம் இன்பசொரூபமான திருமேலே நீ நம்மை நினைத்தாலும், கண்டாலும், கேட்டாலும் உனக்கு இன்பமே விளையும் என்று திருவுளம் பற்றியருளினர்.

பின்பு,

"ஐயனாண்டு தன்னடியாரிற் கூட்டிய
வதிசயங் கண்டாமே"

என்று இன்புற்றுநிற்கிற மாணாக்கனுக்கு, தேசிகர் உண்மையான மெய்வசனத்தையுமனுக்கிரகம் பண்ணுகிறார்.

"விரிந்தசஞ்சிதவினை யன்புடனாம் விழிக்கவெந்தது விரும்புறூற் ஜனனம், புரிந்தவல்வினையுடலுடன கலும்புந் திசேருள் வருவினைபோக்கு, மருந்துயர்ப்பொருளுமிருடம் புனதேயல்ல நம்மளவாகுமிங்குனைப்போ, விருந்த நம்பெரு வடிவைநின்கருத்துள்ளிருததுவாய் பொருளிது வெனவுரைத்தார்.

சற்குருதேசிகன் தரிசனமுற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

அம்பலவாணதேசிகர் திருவடிகளேசரணம்.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# மெய்கண்ட மாலை.

## கட்டளைக்கலித்துறை.

(1) பூவேபொற் பூவின் மணமே மணப்புதுப்பூங் கற்பக ச்
காவே யெனதிரு கண்ணே யென் கண்ணுட் கருமணி யே
கோவே குணக்குன்ற மேயெனை யாண்ட சுகோதய மே
தேவே திருவெண்ணை மெய்கண்ட நாதமெய்த் தேசிகனே.

(2) மெய்வாய்கண் மூக்குச் செவிவழி யேசெல் விடையமைந்தி
லைவா யகப்படு மீபோன மயங்கு மருவினையே ற்
குய்வ யமை காட்டி வினைவீட்டி யின்ப முறக்கரு ணை
செய்வாய திருவெண்ணை மெய்கண்டநாதமெய்த்தேசிகனே.

(3) ஊனேயவ் வூனி னுயிரே யுயிர்க்குயி ரேயுணர் வே
வானே மறைப்பொரு ளேயரு ளேவடி வாகியவெ ங்
கோனே யெனதற்று யானென தாகவுங் கூட்டுவை யோ
தேனே திருவெண்ணை மெய்கண்டநாதமெய்த் தேசிகனே.

(4) பார்த்தவிடமெங்கு நாயேற்கு வேற்று முகப்படுமே ற்
றூர்த்தவறிவினர் நேயமும் வேய்பெனக் காமருளி ற்

 

கூர்த்தமெய் வேடமு மப்படி யேயென் கொடுமையினைத்
தீர்த்தென்னையாண்டருள் மெய்கண்டநாதமெய்த்தேசிகனே

(5) முற்பவம் வந்த வரலாறு முற்று முடிந்ததற் பி
னற்பவம் வந்த வரலாறு மோர்கில னுண்மையென் னே
யற்புத விக்ரக வானந்த ரூப வருட்செல்வ மே
சிற்பர சின்மய மெய்கண்ட நாதமெய்த தேசிக னே.

(6) உன்மத்த மாயைக்கு முன்னது கன்ம மெனவுரைப்ப ர்
கன்மத்தின் முன்னது மாயையென் பார்கலங் காதருள்வாய்
தன்மத்தை முன்னிட்ட மூன்று முணருந் தபோதனர்க்குச்
சின்முத் திரையருள் மெய்கண்ட நாதமெய்த் தேசிக னே.

(7) சுந்தர மான முகத்தா மரையுஞ் சுரந்தவ ரு
ளுந்திய பார்வையுஞ் சின்முத் திரைக்கையு மோங்குமின்பந்
தந்தருள் மேனியும் பாதார விந்தமு மாய்த்தமியே ன்
சிந்தைக்குடிகொண்ட மெய்கண்டநாதமெய்த் தேசிக னே.

(8) ஆறுகி லேனென் கவலையெ லாமின தஞ்செழுத்தை க்
கூறுகி லேனின் னருட்பெருக் கத்தைக் குறித்துணர்ந்தன்

ஞறுகிலேனின்னருளெனைக் காக்குமென்றுண்மையதாய்த்
தேறுகிலேன்வெண்ணெய் மெய்கண்ட நாதமெய்த் தேசிகனே

(9) அறிவா லறிதற் கடங்காத பேரொளி யாகியெங்கு
நிறைவாய்ப் பரம சுகமாகி நேயமி லாருளத்திற்
பிறிவா யடிய ருளத்தமு தாய்ப்பெரி தாகுமின்பச்
செறிவார் திருவெண்ணெய் மெய்கண்ட நாதமெய்த்தேசிகனே

(10) கருவினை யெய்தச் செயுமாண வத்துக்குங் காரண மு
மிருவினை நின்றறிலமை மற் றுண்மையெல்லா மொரு[illegible]
பொருளின தாக வமைதருண் ஞானப் பொருட்க[illegible]
திருவெண்ணெய் மேவிய மெய்கண்ட நாதமெய்த் தேசிகனே.

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

மெய்கண்ட தேசிகன் திருவடி வாழ்க.

—:(o):—